# செஞ்சோலைச் சிறார் மலர்
# CHENCHOLAI CHILDREN'S MAGAZINE

அன்பளிப்பு
$ 1.00

மலர் - 7

DONATION
$ 1.00

ஏப்ரல் 1995

APRIL 1995



கிட்டு நினைவுப் பூங்கா, தமிழீழம்

SEE NO EVIL — தீயனவற்றைப் பாராதே

SPEAK NO EVIL — தீயனவற்றைப் பேசாதே

HEAR NO EVIL — தீயனவற்றைக் கேளாதே

# நம்மைக்காக்க தம்மை தியாகம் செய்தவர்கள் மாவீரர்கள்

நாங்கள் யார்? ஏன் இங்கு வந்திருக்கிறோம்? என்பதை சற்று சிந்தித்துப் பார்ப்போம். எங்களில் சிலர் இந்தியாவில் அகதிகளாக இருந்தோம். இந்தியரானோமா? ஜேர்மனிக்கு சென்று அங்கு வசித்திருந்தோம் முழு ஜேர்மனியரானோமா? இன்று கனடாவில் இருக்கின்றோம். எம்மை முழு கனேடியராக இங்குள்ள பெரும்பான்மை சமுதாயம் ஏற்குமா?

இல்லையேயானால் நாம்யாராக இருக்க முடியும்? நாம் இன,மொழி பண்பாட்டு ரீதியில் தமிழர். ஒரு முறை ரொரன்ரோ மாநகரில் ஒரு தமிழன் கொல்லப்பட்டபோது நம்மில் ஒவ்வொருவரும் கொதித்தெழுந்தோம். ஏன்? கொல்லப்பட்டவர் ஒரு தமிழன்.

எமது உடன் பிறப்புக்கள் நமது தாய்நாடான தமிழீழத்தில் போர் சூழலில் வாழுகிறார்கள். எமது இளைஞர் பலர் பாடசாலைக்குப் போவதில்லை. பஞ்சணை மெத்தையில் படுப்பதில்லை. சிலவேளைகளில் நாள் பூராக உண்பதில்லை. தீபாவளி, தைப்பொங்கல், நத்தார் பண்டிகைகளைக் கொண்டாட நேரம் இருப்பதில்லை. படம் பார்த்து நீண்ட காலம். இவர்கள் தமது நேரம் பொருள் உடல் உயிர் அத்தனையையும் தமது இனத்திற்காகவும் தமது நாட்டிற்காகவும் அர்ப்பணித்து வருகிறார்கள்.

அவர்கள் தமக்காக வாழாது நமக்காக வாழுகிறார்கள். தமது இன்பதுன்பத்தை எல்லாம் நமக்காகவும் நம் நாட்டிற்காகவும் விட்டுக் கொடுக்கிறார்கள். அவர்கள் கனவிலும் நினைவிலும் தமி ழீழத்தாயகமே முன் நிற்கிறது. அவர்கள் நேற்றைய பழம் பெருமை பேசி சும்மா இருக்கவில்லை. நாளை எப்படியும் இருக்கட்டும். நாம் சந்தோஷமாக வாழ்வோம் என்றும் சுயநலமாக இருக்கவில்லை. சிங்கள ஏகாதிபத்தியத்தின் தமிழின அழிப்பு நடவடிக்கைகளுக்கு முற்றுப் புள்ளி வைக்க முன்வந்துள்ளார்கள். வாய்ப்பேச்சில் வீரராக எம் அரசியல் வாதிகள் இருந்தார்கள். ஆனால் செயற்பாட்டில் அவர்களால் பெருமளவு எதனையும் சாதிக்க முடியவில்லை. அவர்கள் சாதாரண சுகபோக வாழ்க்கையை நடத்திக் கொண்டு உரிமைப் போராட்டத்தை நடத்தி வெற்றி பெறலாம் என எண்ணினார்கள்.

உரிமைப்போராட்டம் என்பது கரடுமுரடான பாதையூடாகச் செல்வது ஒன்றாகும். அதில் உடமைகள் இழக்கப்படலாம். உடல் ஊனப்படலாம். உயிரே பறிக்கப்படலாம். போராட்டச் சூழலைச் சரியாக நம்மில் பலர் புரிந்து கொள்வதில்லை. போராட்டம் என்பது உறுதியான கொள்கையின் பின்னணியில், தியாகிகளால், நடத்தப்படும் போது அது புனிதமானது. அப்போராட்டத்தில் முன்நின்று போராடுபவர்கள் ஐம்புலன்களையும் ஒருங்கிணைத்துச் செயல்படுகிறார்கள். அவர்களுக்கு இருக்கும் சக்தி போராட உதவுகிறது. அவர்கள் தம் மன உறுதி பயம் எனும் பேயை விரட்டியடிக்கிறது. அவர்கள் போராடும் திறன் எதிரியைக் கலங்க வைக்கிறது. அவர்களின் தியாக சிந்தனை, புதிய வழிவகைகளைக் காட்டுகின்றது. அவர்களின் அயராத உழைப்பு எதிரியின் படைபலத்தை தகர்த்து எறிகிறது.

இப்போராளிகளில் கரும்புலிகளைத் தவிர ஏனையோர் தாம் களத்தில் மடியவும் கூடும், திரும்பி வரவும் கூடும் என எண்ணலாம். எதிரியை எம் தாயக மண்ணில் இருந்து விரட்டும் போது வீரமரணம் அடையலாம். அப்போது கூட நம் போராளிகள் தாம் போரிட எடுத்த முடிவு சரியானது என்று சொல்லிக் கொண்டே தம் உயிரை விடுகிறார்கள்.

எங்கள் முதியோர் பண்டைய வீரத் தமிழன் பற்றி பேசுகையில் ஓர் குடு குடு பாட்டியின் கதைபற்றி கூறி இருக்கிறார்கள். அதுதான் என்ன?

அப்பாட்டியின் புதல்வன் களத்தில் போரிட சென்று பயத்தால் திரும்பி ஓடும்போது எதிரி ஏவிய அம்பால் குத்திக் கொல்லப்பட்டான் என்று கேள்விப்பட்டு அப்பாட்டி அவனுக்கு பாலூட்டிய மார்பகத்தை வெட்டி எறிய முனைந்தாள். அவ்வேளை சரியான உண்மைச் செய்தி பாட்டியை வந்து அடைந்தது. அவன் புறமுதுகு காட்டி ஓடவில்லை. எதிரியுடன் நேருக்கு நேர் சண்டைபிடித்து உயிர் துறந்தான் எனக் கேள்விப்பட்டாள். அவனை பெற்ற நாளை விட அன்று மகிழ்ச்சி அடைந்தாள்.

அதே போல பல வீரத் தாய்மார், தந்தைமார் தம் தவப்புதல்வர்கள் தமிழீழப் போரில் தம் உயிரைத் துறந்ததையிட்டுப் பெருமைப்படுகிறார்கள். அவ்வாறு உயிர் நீத்தவர்கள் தான் மாவீரர்கள். அவர்கள் அதர்மத்தை அறுத்தெறிந்து தர்மத்தை நிலைநாட்ட முயன்ற தெய்வங்களாகிறார்கள்.

# உய்வு

காற்றாடி நூலின் துணையோடு உயர்ந்து உயர்ந்து வானில் உச்சியில் ஏறியது.

பார்த்தீர்களா...? நான் எவ்வளவு உயரத்தில் இருக்கிறேன்... என்று தன் பெருமையைப் பறைசாற்றியது.

பழைய வரலாற்றை அடியோடு மறந்தது காற்றாடி.

நூல் இனி எதற்கு? என்று கூறிக்கொண்டே நூலைப் பட்டென்று அது அறுத்துக்கொண்டது.

கொஞ்ச நேரத்தில்-

ஊரின் மூலையில் - ஒரு முள் மரத்தில் விழுந்து -கிழிந்து உருக்குலைந்து கிடந்தது காற்றாடி.

காற்றாடியின் கதை தெரிந்த முள்மரம் சொன்னது-

**ஏற்றி வைத்தவனை மறக்கிறவன்**

**இறக்கி வைக்கப்படுவான்!**

**-கவிஞர் காசி ஆனந்தன்**

# PROSPERITY

A kite flew higher and higher up with the help of a thread.

It was so proud that it exclaimed. "Can you see how high I am?"

It forgot how it got to that height and thought, "Why do I need this thread anymore?" Thinking so, it snapped off the thread.

The next moment--

The kite was on a thorny bush, torn and worn out.

The thorny bush that knew the story of the kite said,

**"One who forgets those who helped him or to come up.**

**Will certainly be brought down."**



# தைப்பொங்கல்

தைப்பொங்கல் தமிழர்களுடைய பாரம்பரிய விழாக்களில் முக்கியமானது. இவ்விழா தமிழ் ஆண்டின் பத்தாவது மாதமான தை முதலாம் நாள் கொண்டாடப்படுகிறது. இந்த நாள் பெரும்பாலும் சனவரி 14ம் நாள் வருகிறது.

இந்நாளில் சூரியன் வடக்கு நோக்கிப் பயணம் செய்யும் போது பன்னிரு ராசிகளில் ஒன்றான மகரராசியில் பிரவேசிக்கின்றான். இதனை "உத்தராயன" என்று அழைக்கின்றோம்.

உண்மையில் இவ்விழா சூரிய பகவானுக்கு நன்றி செலுத்தும் விழாவாகும். வயலில் நெல்மணிக் கதிர்களைக் கண்டபின் பகலவனுக்குப் பொங்கிப் படைக்க உழவர்கள் ஆயத்தமாகிறார்கள்.

அறுவடை செய்த புதிய நெல்லைக் குத்தி அரிசியாக்கி அதைப் புதுப்பானையில் பால் பொங்கி வரும் போது இட்டுப் பொங்குகிறார்கள். பானையில் பால் பொங்கி வழியும் போது கிழக்கு வானத்தில் சூரியன் உதயமாகிறான். பொங்கப்பட்ட பொங்கல் சூரியனுக்கே முதலில் படைக்கப்படுகின்றது. பின்பு அதனைக் குடும்பத்தவர்களும், நண்பர்களும், மற்றோரும் உண்டு மகிழ்கிறார்கள்.

தைப்பொங்கலுக்கு அடுத்த நாள் பட்டிப் பொங்கலாகும். உழவர்களுக்கு உறுதுணையாக விளங்கும் மாடு, கன்றுகளுக்கு நன்றி தெரிவிக்கும் முகமாக இவ்விழா கொண்டாடப்படுகிறது. இந்நாளில் மாடுகளை நீராட்டி, அலங்கரித்து பட்டியில் பொங்கிப் படைக்கின்றனர்.

தைப்பொங்கல், பட்டிப் பொங்கல் விழாக்களின் முக்கிய நோக்கம் நன்றி செய்தார்க்கு நன்றி செலுத்த வேண்டும் என்ற எண்ணமேயாகும். நன்றி செலுத்துதல் தமிழர் போற்றும் உயரிய விழுமியங்களில் ஒன்றாகும்.

தைப்பொங்கல் விழா உலகம் முழுவதும் வாழும் ஏழு கோடி தமிழர்களால் கொண்டாடப்படுகிறது. இவ்விழா எங்களது உயரிய பாரம்பரியத்தையும், பண்பாட்டையும் பிரதிபலிக்கின்றது.

இப் பாரம்பரியத்தை நாம் தொடர்ந்து பேணுவதோடு அதனை எமது நாளைய சந்ததிக்கும் கையளிக்க வேண்டும்.

# THAIPONGAL

THAIPONGAL is an important traditional festival of Tamils. It is celebrated on the first day of the tenth month 'THAI' of the Tamil calender. This day usually falls on the 14th, January of each year.

It is the time when the sun to enters the Zodiac sign of Capricorn (Maharam) in its northerly course or "Utharayana". It marks an important change of seasons, bringing warmth and sunshine after the cold rainy months.

This is really a thanksgiving celebration in honour of Sun-God. The farmers after seeing the first years of the corn in their fields, prepare their offerings of milk rice to Sun-God.

The newly harvested cereal (rice) is cooked in a new pot with milk. Milk is allowed to boil over just as the Sun rises in the eastern horizon. This milk rice called "Pongal" is first offered to the Sun-God by way of thanksgiving and then shared with family, friends and the needy.

The day following "THAIPONGAL", is celebrated as "PADDYPONGAL". This celebration is to thank the domestic cattle - the mainstay of the farmers. On this day the cattle will be bathed and provided with milk-rice boiled at the barn.

The main purpose of "THAIPONGAL" and "PADDYPONGAL" festivals is to thank each and everyone who helped us. Showing gratitude is one of the fundamental values cherished by the Tamils.

The tradition of celebrating "THAIPONGAL" festival by the seventy million Tamils all over the world symbolises our rich heritage and culture. We should continue this rich tradition and pass it on to posterity.

# கிறிஸ்மஸ் விழா

கிறிஸ்மஸ் என்றால் என்ன?

கிறிஸ்மஸ் என்றால் கடவுளின் மகன் யேசு பிறந்த நாள்.

மேரி என்று நசரேத்தில் வாழ்ந்த கன்னியின் மகனாகப் பிறந்தார். கன்னிமேரி தச்சனாக வாழ்ந்த யோசப் என்பவரை யேசுவின் தந்தையாக கடவுளின் மூலம் பெற்றார். எப்படி?

மேரிக்கும் யோசப்புக்கும் வயது, வித்தியாசம் அதிகம். ஒரு நாள் மேரி தன்னுடைய வீட்டில் இருக்கும் போது தேவதூதன் தோன்றி "பயப்படாதே! நீ கடவுளால் தெரிந்து கொள்ளப்பட்டவள். நீ கடவுளின் மகனாக ஒரு குழந்தையை பெற்று அவருக்கு யேசு என்னும் நாமம் இடுவாய்" என்று கூறினார்.

மேரியும் சம்மதித்து "இது எப்படி ஆகும்? நானோ கணவனை அறியேன்" என்றாள். தேவதூதனும் "யேசுவின் தந்தையாக தச்சனாக வாழும் யோசப் உன்னுடன் இருப்பார். இறைவனின் குழந்தையாக யேசு உன்னிடம் பிறப்பார்" என்று கூறி மறைந்தார்.

இவ்வாறு கருத்தரித்த மேரியும் யோசப்பும் வாழ்ந்து வரும் நேரத்தில் யோசப் தூக்கத்தில் கனவு கண்டார். அதில் கடவுளின் கட்டளையாக அவர் மேரியை நசரேத்தை விட்டு வெளியே கூட்டிக் கொண்டு போகும்படி பணிக்கப்பட்டார்.

இவ்விதமாக யோசப்பும் நிறைமாத கர்ப்பிணியான மேரியை அழைத்துக்கொண்டு தங்குவதற்கு இடமின்றி கடுங்குளிரில் பெத்தலேம் என்ற ஊரில் இடம் தேடி அலைந்தார்.

இறுதியாக தங்க இடமின்றி மாட்டுத் தொழுவத்தில் தான் இருவரும் வாழவேண்டி நேரிட்டது. இந்த நேரத்தில் தேவனால் தெரிந்து கொள்ளப்பட்ட மேரி யேசு என்ற பாலகனை மார்கழிமாதம் 25ம் திகதி பெற்றெடுத்தார்.

பாலகன் பிறந்ததை தேவதூதர்கள் இடையர்கள் மூவிராசாக்கள் ஆகியோருக்கு அவர்களின் கனவில் தோன்றி அவரைப் போய் வணங்குமாறு அறிவித்தார்கள்.

அவ்விதமே அவர்களும் பாலகனை சென்று வணங்கிப் பரிசுகளும் கொடுத்தார்கள்.

இதனை நாமும் எம் உறவினர் நண்பர்கள் ஆகியோருக்கு இந்த சந்தோஷமான நாளில் பரிசில்கள் வழங்கியும் ஒன்று சேர்ந்து உண்டு களித்தும் கொண்டாடுகிறோம்.

இந்த நாள் கிறிஸ்தவர்களாகிய எங்களுக்கு மிகவும் விசேஷமான நாள். அதனை என்றுமே எவரும் சந்தோஷமாகக் கொண்டாடுவோம்.

நத்தார் புதுவருட வாழ்த்துக்கள்.

**செஞ்சோலை சிறுமி**
**ஆன் ஜெய்மி**

# Meaning of Christmas

What is Christmas? Christmas is when God's son Jesus was born!

Mary, a young girl who lived in Nazareth, was engaged to a carpenter, Joseph. Joseph and Mary were many years apart. One day an angel named Gabriel appeared to Mary.

He said, "Do not be afraid, Mary, for you have found favour with God. You are to have God's son and you are to name him Jesus.

Mary accepted this and said,

"I'm to do as God says, for I am his servant.

Mary's cousin,Elizebeth, was also expecting a child. Angel Gabriel told Mary to go and see Elizebeth.

Elizebeth was also told by Angel Gabriel about Mary.

Elizebeth was very old.So old that it was impossible for her to have a child.Elizebeth was told to name her child John and he would be a big part in Jesu's life.

When Mary went to Elizebeth's house, Elizebath ran out and said,

"Hai, Mary full of grace.The Lord is with you. Blessed are you amongst women."

Mary came back to Nazareth after Elizebeth had her child.

While Mary was pregnant, Joseph had a dream.

In his dream an angel appeared and told him to take Mary and leave Nazerath, and he did so.

As they were travelling, Mary stopped.She was tired. So Joseph went to the inn's Bethlehem and asked for space, but they were all too full. They were about to give up when an inkeeper offered them a stable.

There Mary had little baby Jesus.Near the little stable some shepherds were watching the flocks.

Suddenlly angels appeared and said: "The son of God is born go and see him" and they went.

While they were travelling suddenly a new star appeared, which meant a new king was born.They started following the star and it led to baby Jesus.

The three wise men offered the new king gifts of gold, frankincense and myrrh.

We give presents to cash other that the saviour was born to celebrate the joy.

Christmas is a very special time,and we should celebrate it happily.

Seasons Greeting!

Ann Jaimi Alexander
Tamil Kids Club, Scarborough.

# தமிழர் புத்தாண்டு

இவ் வருடம் தமிழர் புத்தாண்டு 13-04-1995 வியாழக்கிழமை இரவு பிறந்தது. இவ் வருடம் "யுவ" வருடம் எனப்படும். அறுபது ஆண்டுகளுக்கு பெயர்கள் உண்டு. அறுபது ஆண்டுகள் முடிந்த பின்பு மீண்டும் அப் பெயர் வரிசை தொடரும். இம்முறை அறுபது வருட சுழற்சியில் எட்டாவது வருடமிது.

தமிழர்கள் புத்தாண்டு சூரிய - சந்திர தொடர்புகளை மையமாகக் கொண்டு கணிக்கப்பட்டது. வானியல் ஆராய்ச்சியில் முன்னின்ற தமிழர்கள் வருடம், பருவகாலம் போன்றவற்றை நன்கு கணித்திருக்கிறார்கள்.

சூரியன் என்ற தலைமைக் கிரகம் மேடம் என்ற முதலாவது ராசியில் பிரவேசிக்கின்ற காலப்பகுதியே புதிய வருடமாகும். பன்னிரண்டு ராசிகளில் முதன்மையான வீடு "மேடம்" ஆகும். முதலாவது ராசிக்கு சூரியன் வரும் காலத்தையே தமிழர்கள் புதிய வருடம் எனக் கொண்டாடுகிறார்கள்.

தமிழரின் கலை, பண்பாடு, பாரம்பரியம் ஆகியன புத்தாண்டில் பிரதிபலிக்கின்றன. சிந்தனையில் தூய்மை, செயல்களில் செம்மை என்பன புத்தாண்டில் கவனத்தில் எடுக்கப்படுகிறது. புத்தாண்டன்று ஆலயங்கள் சென்று தெய்வ வழிபாட்டில் ஈடுபடுவது வழக்கம். தமிழர்கள் தமது வாழ்க்கையில் அறம், தர்மம், நீதி ஆகிய பண்புகளை இவ் விழாக் காலங்களில் நினைவு கூருகிறார்கள். அவற்றைக் கடைப்பிடிக்க முன்வருகிறார்கள். புத்தாண்டில் நல்லதொரு ஆரம்பத்தை கவனிக்கிறார்கள். முதல் கோணில் முற்றும் கோணும் என்பதற்கு இணங்க முதல் செய்ல்களில் செம்மை காண்கிறார்கள்.

பிள்ளைகள் புத்தாண்டில் தம் நண்பர்கள், உறவினர்களுடன் குதுகலமாக கொண்டாடுகிறார்கள். இந் நாளில் பிள்ளைகள் மனம் நோகாமல் இருக்க பெற்றோர் விரும்புகிறார்கள். பிள்ளைகளும் பெற்றோர் மனம் நோகாமல் பார்த்துக் கொள்ள வேண்டுமல்லவா?

புத்தாண்டில் கலை நிகழ்ச்சிகள், விளையாட்டுக்கள், திரைப்படம் பார்த்தல் போன்ற பல களியாட்டங்களில் முதியோர், பெற்றோர், சிறார்கள் பங்கு பற்றிவருவதும் வழக்கமாகும்.

தமிழீழத்தில் புத்தாண்டு விடுமுறை நாளாகும். எமது அயல் நாட்டவர்களான சிங்களவர்களும் இதே நாளை தமது புத்தாண்டாகக் கொண்டாடுகிறார்கள். அங்கு புத்தாண்டு தினம் மிகவும் கோலாகலமாகக் கொண்டாடப்பட்டு வருகிறது.

தமிழீழத்தில் செஞ்சோலைச்சிறார்கள் புத்தாண்டன்று பரிசுகள் பெற்றுக் கொள்கிறார்கள். செஞ்சோலைச் சிறார் ஒன்று கூடி பல தேசிய விளையாட்டுக்களில் பங்கு கொள்கிறார்கள்.

புத்தாண்டு தினத்தில் நாம் ஒரு வருடத்திற்கான திட்டங்களை தீட்டுகின்றோம். வீடுகள் திருத்தல், வயதான அக்கா, அண்ணாவிற்கு விவாக ஒழுங்குகள், போன்ற திட்டங்களை பெற்றோர் தீட்டுகிறார்கள்.

இறைவன் அருளால் அத் திட்டங்கள் செயற்பட வருடம் பூராக உழைக்கவும் உறுதி கொள்கிறார்கள்.

# THE TAMIL NEW YEAR CELEBRATIONS

The Tamils have celebrated the birth of the month "Chithirai" which falls on the 13th or 14th of April as their New Year from time immemorial. The birth of the New Year is based on the Tamil almanac dating back at least 4500 years. The almanac is computed according to the movement of the Sun as observed from the earth.

The New Year celebration is special to the more than 70 million Tamils world over. The month Chithirai is the first of the 12 months of the Tamil year. A year has 365 days, 6 hours and twelve minutes. The current new year is called "UVA" which is one in a cycle of sixty years. The present era is Kali Yuga, the last of the 4 Yugas, which commenced 5094 years ago. It is said that at the end of Kali Yuga there will be mass destruction and then life will begin all over again.

Astronomically the New Year coincides with the precise time the sun enters the zodiacal sign of "Medam" (Aries), the first of the twelve signs in the zodiac. For the people living in the tropics the Vadakkoddam (Utharayana) of the sun's northerly course ushers more warmth and sunshine when the dew and mist of the months of February and March (Pinpanikkaalam) are dispelled. It is the time when trees bloom and sweet Fragrance of flowers fill the air. The kuyilkal (Cuckoos) sing and parrots chirp merrily from trees, specially the mango trees. Aptly this season is called "Vasantham" or "Ilavenil" (early spring) when a sense of joy and jubilation manifests in nature all around. The great epic of Silappathikaram (Story of the Anklet) written almost 2000 years ago, mentions the elaborate and colourful celebration of Vasantha Vizha (spring Festival) in the town of Poompukar situated on the banks of river Kaaveri on Chithira Pavuranami (April Full Moon day).

The Tamils celebrae the New Year with great pomp and glory than any other traditional celebrations. The festivities connected with the New Year continue right throughout the month. The New Year day itself begins with people taking an anointed bath by smearing the head and body with a special medicament prepared from leaves, flowers, saffron and milk. After the bath every one wears new cloths. The men wear white verti, women sarees and children colourful garments. The more orthodox among them, specially the women, choose the cloths in the auspicious colour considered to bring luck and prosperity for the rest of the year. Then follows the lighting of the hearth and cooking of milk-rice at the "Punniya kaalam" or auspicious time. There is elaborate worship in the shrine room of the house and the first meal of the day is taken at the auspicious time. People also throng the nearest village temples for poojas, worship, prayers and offering. In the evening there are festivals and folk dances. The rest of the day is devoted to visiting relatives and friends and exchanging New Year greetings.

The New Year has special attraction to the youth for merrymaking and play. Swinging in swings, made out of the ropes tied between trees, to their heart content is a favourite pastime. Traditional sports and competitions are common on this day. The breaking of coconuts among youthful competitors used to be a favourite sport not in the distant past. Greetings and visits are exchanged among relatives and friends. It is also the occasion to embark on new ventures. A popular custom is the gift of money. When one visits a relative or friend's house, he is entertained and presented with cash enclosed in betel leaves. More often than not money is presented by men of standing who have succeeded in life. This giving is called "Kaivichesam" meaning lucky hands.


Master, the people of Mayilapur suffer due to failure of monsoon. In what way shall I help them?
To mitigate the killing hunger of the poor, throw open your paddy barn at once.


I have faith that my stranded ship will be restored if your revered hands touch the rope. Kindly come to the port with me,


Valluvar touched and pulled the rope saying "Eliah, Elelo". Elelasingan and boatmen did the same thing.
"Eliah, Elelo".
"Eliah, Elelo".
"Eliah, Elelo".
The ship restored.


One day evening, Elelasingan and Mullai met in a garden and became lovers.




**to be continued....**

# "கராத்தே" - பூர்வீகம்

ஏறக்குறைய 5000 வருடங்களுக்கு முன்பு இந்திய நாட்டில் இருந்த தமிழ் இளவரசன் ஒருவனே ஆயுதம் தரிக்காத தற்பாதுகாப்பு முறை ஒன்றை உருவாக்கியதாக நம்பப்படுகின்றது. இவர் இம்முறையை மிருகங்களினதும் பறவைகளினதும் அசைவுகளை அவை சண்டையிடும் போது அவதானித்து உருவாக்கினார். பின்பு இந்த அசைவுகளைச் சிறப்பான முறையில் மனித உடலுக்கு ஏற்ப மாற்றி அமைத்தார். அதன் பின்னர் அவற்றை ஆயிரத்திற்கும் மேற்பட்ட அடிமைகளில் பரிசோதித்தார்.அதன்மூலம் ஒரு சிறு ஊசி கூட பெரும் பாதிப்பை உண்டாக்கக்கூடிய மனித உடலின் மென்மையான பாகங்களை அவ்விளவரசன் கண்டுபிடித்தார். அதன்பின் இவ் உத்திகளை மனித உடலின் மென்மையான பாகங்களில் உபயோகித்து முதன்முறையாக ஆயுதந் தரிக்காத பாதுகாப்பு முறையை கண்டுபிடிப்பதில் வெற்றி கண்டார்.

பின்பு ஜப்பானியர்களால் தரும ரெய்ஷி என்றழைக்கப்படும் போகிதர்மா என்னும் புத்த பிக்கு இந்திய நாட்டில் தங்கியிருந்த வேளை இவ் ஆயுதம் தரிக்காத பாதுகாப்பு முறையை பயின்று சீன நாட்டில் உள்ள பிக்குகளுக்குப் பயிற்சியளித்தார். ஆனால் மென்மையான அந்தப் பிக்குகளால் கடினமான பயிற்சிமுறைகளை பின்பற்ற முடியவில்லை. அதனால் ஞானமார்க்கத்திற்கான உடற்பயிற்சி முறைகளை உள்ளடக்கிய ஒரு முறையைத் தோற்றுவித்தார். இப்பயிற்சி முறைகள் உடலை மட்டும் மையமாகக் கொண்டு இருந்ததால் மனதையும் ஒரு நிலைப்படுத்தும் பயிற்சிகளையும் போகிதர்மா உருவாக்கினார். இந்தப் பயிற்சிகளே ச்-வ்வா- பா என்று சீன மொழியில் அழைக்கப்படுகின்றது. இதனை முதல்வழி அல்லது கெம்போ என்றும் அழைப்பர். இந்த வகையில் இப்பயிற்சிகளை உருவாக்கி கற்பித்த போகிதர்மாவே உலகிற்கு தற்போது 'கராத்தே' என்றழைக்கப்படும் தற்பாதுகாப்புக்கலையின் நுணுக்கங்களையும் மாற்றங்களையும் அறிமுகப்படுத்திய இரண்டாவது நபர் ஆவார்.

19ம் நூற்றாண்டில் இக்கலை ஒக்கினாவா நகரத்தில் அறிமுகப்படுத்தப்பட்டது. அதன் தொடர்ச்சியாக 1923ல் இருந்தே ஜப்பானியர்கள் கராத்தே கலையை மிகவும் ஆர்வத்துடன் பயில முற்பட்டனர்.

இது போன்ற போர்க்கலைகள் மனிதகுலம் தோன்றிய காலம் முதல் தொட்டு வளர்ந்து வந்துள்ளது. முதலாவது போர்க்கருவி கண்டுபிடிப்பதற்கு முன்பிருந்தே மனிதர்கள் தங்கள் கால்களையும் கைகளை யுமே இவ் உலகத்தின் கொடூரங்களில் இருந்து பாதுகாப்பதற்கு பயன்படுத்தினார்கள்.

# ORIGIN OF KARATE

It is believed that about 5000 years ago a Tamil Prince from India developed the first crude version of weaponless self-defence by watching the movements of animals and birds while they fought. He applied these movements to the human body and discovered that these movements could be effectively employed. The prince then experimented on over 1000 slaves, to discover the weaker parts of the human body, where even a puncture with a needle could kill the victim. The prince then used the techniques he found successful and directed them at the weaker parts of the human body and perfected the first known art weaponless, self-defence.

Bohidharma (known as Druma Taishi to the Japanese), a Buddhist monk, learnt the technique to Weaponress self-defence while in India, and imparted training to his monks in China. The exercises were too rigorous and the simple monks were unable to grasp Bohidharma's training, whereupon he devised a system of exercises to condition the body to experience better enlightenment. These exercises, however, could only condition the body and thus Bohidharma designed a series of movements which also conditioned the mind. These exercises formed the foundation of the Chinese "Ch'uaufa" or literally "the first Way" or the "Kempo". Having designed and taught these exercises Bohidharma was the second person to perfect the art of self-defence which with refinement and modification has now come to be known as "Karate".

This art of weaponless self-defence was introduced into Okinawa in the early 19th century, and subsequently in 1923 to the Japanesse who learn and teach "Karate" with profilic enthusiasm.

The beginning of martial arts can be traced back as far as the histroy of man. As early as the invention of the first weapons, people have always had to use their own hands and feet to protect themselves from each other and the Harsh realities of the world.

# THE LION AND THE BEAR

Once a dead body of a deer was found in the forest. A lion and a bear came to eat it. The lion said that he saw the deer first and he must eat it. The bear said that he saw the deer first and he should eat it. They fought against each other. They became tired and fell down. In the mean time, a fox came there. It ate the deer. After a while, the lion and the bear woke up. They saw that the fox had left after eating the deer. Both felt very sad.

# இவர்களை எப்படி அழைப்பது?



கணக்காளர்



காரோட்டி



நடிகர்



பணியாளன்



மாடி ஏற்றி



குயவர்



தோட்டக்காரர்



இசைக்குழு

இயக்குநர்



வாதுவர்





வாடகை

மோட்டார் ஓட்டி



குப்பை

கூட்டுநர்



நிழற்பட

மெடுக்குநர்

# விதைக்கப்படுவோர்

அமைதி என்ற பேரில் இந்திய இராணுவம் எம்மண்ணில் அப்பாவி மக்களையும், விடுதலைக்குப் போராடும் வீர வேங்கைகளையும் கொன்று குவித்த சமயம் அது. பல துன்பங்களுக்கும் ஆபத்துக்களுக்கும் இடையில் போராளிகள் சிக்கித்தவித்தனர். அந்நிய இராணுவம் சுற்றி வளைத்ததும் "சயனைட்" அருந்தியும் நேரடியாக மோதலில் ஈடுபட்டு எதிரிகளை அழித்தும், தம் உயிரைப் போக்கிய போராளிகள் பலர். "எதிரியிடம் உயிருடன் பிடிபடக்கூடாது" என்ற உயர்ந்த கொள்கையுடன் தம் இன்னுயிரை எம்மண்ணிற்கு காணிக்கையாக்கிய விடுதலைப்புலி வீரர்களில் ஒருவன் வீரவேங்கை ரமேஷ்.

ரமேஷ், பிற தோழர்கள் போலவே தலைமறைவு வாழக்கையில் ஈடுபட்டுக்கொண்டே எதிரிகளை அழிப்பதில் கண்ணும் கருத்துமாய் இருந்தான். அன்றும் அதே போல் தனது சகதோழன் ஒருவனின் துவிச்சக்கர வண்டியில் சென்று கொண்டிருக்கும் போது தனது தங்கையைக் கண்டான். அலைச்சலாலும்,பட்டினியாலும் வாடி வதங்கிப்போய் இருந்த தனது அண்ணனைக் கண்ட தங்கை வீட்டிற்கு வருமாறு வற்புறுத்தினாள். அவளது வற்புறுத்தலுக்கிணங்க வீட்டிற்குச் சென்றான். மற்ற தங்கையரும் அவன் பெற்றோரும் அவனைக்கண்டு மகிழ்ச்சியில் திளைத்தனர். அவனைப் பெற்ற அன்னை அவன் சாப்பிட உணவு கொண்டு வர, தங்கையர் நாலாபுறமும் காவல் காத்தனர். "திடுதிடுப்" என்று இந்திய இராணுவம் நாசகாரக் கும்பலான எம் இனத்துரோகிகள் சிலரது வழிகாட்டலுடன் சுற்றி வளைத்தனர். பெற்றோரும் தங்கையரும் செய்வதறியாது ரமேசைக் கட்டி அணைத்து அழுதனர். எதிரிகள் அவன் தந்தையையும் சகோதரிகளையும் அவனிடமிருந்து பிரித்து இழுத்து அடித்துத் துன்புறுத்தினர்.

அவன் தாய் அவனைக்கட்டியணைத்து இறுகப்பற்றிக் கொண்டார். ரமேஷ் ஒரு கரத்தால் தன் அன்னையை அணைத்தவாறே தனது மறுகரத்தால் "சயனைட்" டைப் பற்றினான். அன்னையை அணைத்தவாறே சயனைட்டை அருந்தி தன் தாயின் தோளிலேயே வீரமரணம் அடைந்தான். அவனை இழுத்து வீழ்த்திய அந்நிய இராணுவமும் தேசத்துரோகிகளும் அவனது உயிரற்ற உடலிலே தனது இயலாத்தன்மையைக் காட்டியது. ஒரு புலிவீரனைக் கொன்று அழித்து விட்டோம் என்று எக்காளம் இட்டனர். "மாவீரர்கள் புதைக்கப்படுவதில்லை, விதைக்கப்படுகிறார்கள் எம் நெஞ்சங்களில்" என்பது அவர்களுக்குத் தெரியாது.

தமது இன்னுயிரை எமது தேசத்திற்கு அர்ப்பணித்த பல நூற்றுக்கணக்கான புலிவீரர்களில் ஒருவன்தான் இந்த ரமேஷ். தமிழீழம் எமக்கு எட்டிய தொலைவிலேயே உள்ளது. அத்னை நோக்கிப் போகும் பயணத்தில் பலவீரர்களை நாம் பறிகொடுக்க வேண்டியுள்ளது. என்றும் இவர்களை எம் நெஞ்சில் நிலைநிறுத்தி இவர்கள் நினைவோடு வாழ்ந்து, எம் தேசத்தை மீட்கும் பணியில் எம்மாலியன்ற பங்கை ஆற்றுவதே இவர்களுக்கு நாம் செய்யும் கைம்மாறு!

**வாழ்க தமிழீழம்!**
**வளர்க மாவீரர் புகழ்!**

**செஞ்சோலை**

# HEROES WHO ARE SOWN

It was the time when the Indian army killed the innocent Tamil people and the freedom fighters in the name of "peace".The freedom-fighters were amidst suffering and danger.When surrounded by the enemies, they fought back and killed them.If they were captured by their enemies alive,they bit the "cyanide" capsule and killed themselves.Ramesh was one of those freedom fighters who devoted their lives for the Tamil land.

Like any other of his friends, Ramesh also was living in hidings and killing the enemies.One day he happened to meet his sister on his way. He was extremely tired and exhausted. On seeing him his sister compelled him to come home and have something to eat. His parents and sisters were delighted to see him back. While they were keeping a watch on all sides he sat down to eat.But suddenly the Indian Army, guided by some traitors, surrounded the house. Ramesh's mother and sisters hugged him and started crying. The enemies beat his father and sisters. His mother held him tightly. Ramesh took hold of the cyanide capsule, bit it and died in his mother's arms.The enemies took his lifeless body and falsely boasted that they had killed a Tiger. They are not aware that Martyrs are not buried; they are sown. They are sown in our hearts.

Ramesh is just one of those hundreds of Tigers who sacrificed their precious lives for their country. Tamil Eelam is not too far from us.On our way to it we may lose several of our heroes. We should always remember them and live with their memories. We can reward them only by performing our share to help in the process of redeeming our country.

# COLONEL KIDDU CHILDREN PARK

Son:- Mother, I am tired of walking. Can we buy some ice-cream?

Mother:- Not here, son. We can buy ice-cream in Kiddu Mama Children Park.

Son:- Have we to go a long way?

Mother:- No, It's close by. We have now passed the Nallur Temple.Look! There's a big crowd at the junction where the statue of Chankilian, the ancient Tamil king, is.

Son:- What are the people doing there?

Mother:- They are buying tickets at the entrance of Kiddu Mama Park.

Son:- Why is this park named after Kiddu Mama?

Mother:- It's because Kiddu Mama loved children and worked for the people.

Son: But who is Kiddu Mama?

Mother: Don't you know Kiddu Mama? We can see him in the park now. His statue is erected there to perpetuate his memory.
He was one of the great freedom fighters of our time.

Son: When did he die?

Mother: He died in January last year.

# கேணல் கிட்டு சிறுவர் பூங்கா

மகன் :-அம்மா, நடந்து எனக்குக் களைப்பாயிருக்கிறது கொஞ்சம் 'ஐஸ்கிறீம்' வாங்க முடியுமா?

தாய்:- மகனே! இங்கேயல்ல.கிட்டுமாமா சிறுவர் பூங்காவில் 'ஐஸ்கிறீம்' வாங்கலாம்.

மகன்:- நாங்கள் வெகுதூரம் போகவேண்டுமா?

தாய்:- இல்லை. அது அருகில் உள்ளது. நாம் இப்பொழுது நல்லூர் கோவிலைத்தாண்டி விட்டோம். அதோ பார் புராதன தமிழ் மன்னன் சங்கிலியன் சிலை இருக்கும் சந்தியில் ஒரு மக்கள் கூட்டம்.

மகன்:- மக்கள் அங்கே என்ன செய்கிறார்கள்?

தாய்:- கிட்டுமாமா பூங்காவின் நுழைவாயிலில் பிரவேசச் சீட்டு வாங்குகிறார்கள்.

மகன்:- எதற்காக இப்பூங்காவிற்கு கிட்டு மாமாவின் பெயரிடப்பட்டுள்ளது?

தாய்:- கிட்டுமாமா குழந்தைகளை அதிகம் நேசித்ததுடன் மக்களுக்காகவும் உழைத்ததினால் தான்.
மகன்:- ஆனால்,கிட்டுமாமா என்பவர் யார்?

தாய்:- கிட்டுமாமாவை உனக்குத் தெரியாதா? அவரை இப்பொழுது பூங்காவில் பார்ப்போம். அவரின் நினைவை என்றும் நிலை நாட்டுவதற்காக அவரின் சிலை அங்கு நிறுவப்பட்டுள்ளது. எங்கள் காலத்தின் சிறந்த சுதந்திர போராளிகளில் ஒருவர் அவர்.

மகன்:- அவர் எப்பொழுது இறந்தார்?

தாய்:- 1993ம் ஆண்டு ஜனவரி மாதத்தில் அவர் வீரமரணம் அடைந்தார்.

Son: Mother, Tell me more about Kiddu Mama.

மகன்:- அம்மா, கிட்டுமாமாவைப் பற்றி கூடச் சொல்லுங்கள்.

Mother: Kiddu Mama was a senior member of the LTTE. When he was in command of Jaffna, he fought along with his cadres and prevented the army from penetrating into the populated areas. He loved his people and made great sacrifices for the Tamil people.

தாய்:- கிட்டுமாமா விடுதலைப் புலிகளின் மூத்த உறுப்பினர்களில் ஒருவர். அவர் யாழ்ப்பாணத் தளபதியாகவிருந்த பொழுது தன் சகாக்களுடன் சேர்ந்து போராடி மக்கள் குடிமனைகளுள் புகாமல் படையினரைத் தடுத்தார். மக்களை நேசித்த அவர் தமிழ் மக்களுக்காகப் பெருந்தியாகம் செய்தார்.

Son: Mother! Here comes uncle Bala. Good evening, uncle.

மகன்:- அம்மா! இதோ பாலாமாமா வருகிறார்.வணக்கம் மாமா.

Uncle: Good evening. I have bought two tickets for you. You can enter the park through this gate.

மாமா:- வணக்கம். உங்களுக்கு இரு நுழைவுச் சீட்டுக்கள் வாங்கி வந்திருக்கிறேன். இந்த நுழைவாயினூடாக நீங்கள் பூங்காவினுள் செல்லலாம்.

Son: Uncle, Where is Kiddu mama's statue?

மகன்:- மாமா,கிட்டுமாமாவின் சிலை எங்கே?

Uncle: Look. It's there in the middle of the park. Come. Let's go and see it.

மாமா:- அதோ பார். பூங்காவின் நடுவில் இருக்கிறது. வாருங்கள். அதை நாம் போய்ப் பார்ப்போம்.

Mother: It's a life-size statue, and looks exacity like the courageous and committed colonel Kiddu.

தாய்:- அது ஒரு ஆள் அளவுச் சிலை. துணிவும் அர்ப்பணமும் உடைய தளபதி கிட்டுவைப் போலவே சரியாக அமைந்துள்ளது.

Son: Uncle! What's that mountain over there?

மகன்:- மாமா அங்கே இருப்பது என்ன மலை?

Uncle: Come. I'll take you there. First, we'll go through this cave. Look at these fish tanks.

மாமா:- வாருங்கள். நான் அங்கு கூட்டிச் செல்கிறேன். முதலில் இந்தக் குகையினூடாகப் போவோம். இந்த மீன் தொட்டிகளைப் பாருங்கள்.

Son: They are very pretty and beautiful. Oh! what a variety of fish!

மகன்:- அவை மிக அழகாக இருக்கின்றன. ஓ! எத்தனை விதமான மீன்கள்!

Uncle: Now, we'll climb the steps and go up the mountain.

மாமா:- இப்பொழுது நாம் படிகளில் ஏறி மலைக்குப் போவோம்.

Mother: What a wonderfull sight from the top!

தாய்:- உச்சியிலிருந்து பார்க்கும் பொழுது என்ன ஆச்சரியத்துக்குரிய காட்சி! அந்த நீர் வீழ்ச்சி

That water-fall is fascinating!

Son: Uncle Bala! Can we have some ice-cream?

Uncle:- You cross this suspension-bridge and rest a while in that small hut. In the meantime, I'll buy the ice-cream for you.

Son:- Mother! I get a funny feeling walking across this hanging bridge.

Mother:- Son. There is nothing to be frightened of. It's very safe.

Son:- Ahh!We have crossed the bridge.

Mother:- We'll sit here and wait for uncle to come.

Son:- Mother! Uncle Bala is coming with three ice-cream cones.

Uncle:- After eating the ice-cream, you can play on the swings.

Son:- Thank you, uncle Bala. The ice-cream is very delicious. I feel refreshed now. I am going to play on the swings.

Uncle:- There's so much here to enjoy in this park. We can stroll around.The flower-gardens are beautiful.We can see the photos of the martyrs.We can sit and relax here.

Mother:- You are right.I'll have to bring the children again on another day.

கண்ணைக் கவருகிறதே!

மகன்:- பாலா மாமா ஐஸ்கிறீம் சாப்பிடலாமா?

மாமா:- நீங்கள் இந்தச் தொங்கு பாலத்தைக் கடந்து சிறிது நேரம் அந்தச் சிறு குடிசையில் இளைப்பாறுங்கள் அதற்கிடையில் நான் உங்களுக்கு ஐஸ்கிறீம் வாங்கி வருகிறேன்.

மகன்:- அம்மா, இந்தத் தொங்கு பாலத்தைக் கடந்து செல்கையில் எனக்கு ஒரு விநோதமான உணர்வு ஏற்படுகின்றது.

தாய்:- பயப்படுவதற்கு ஒன்றுமில்லை. மகனே அது மிகவும் பாதுகாப்பானது.

மகன்:- ஆ! நாம் பாலத்தைக் கடந்துவிட்டோம்.

தாய்:- மாமா வருமட்டும் இவ்விடத்தில் இருப்போம்.

மகன்:- அம்மா! பாலா மாமா மூன்று ஐஸ்கிறீம் குவளைகளுடன் வருகிறார்.

மாமா:- ஐஸ்கிறீம் சாப்பிட்டபின் நீ போய் ஊஞ்சல் ஆடலாம்.

மகன்:-நன்றி பாலா மாமா. ஐஸ்கிறீம் மிகவும் சுவையாக இருக்கிறது. இப்பொழுது புதுவலுப் பெற்றுள்ளேன். நான் ஊஞ்சல் ஆடப்போகிறேன்.

மாமா:- இங்கு இரசிப்பதற்கு அதிகமுண்டு. நாம் உலாவித்திரியலாம். பூந்தோட்டங்கள் அழகானவை. மாவீரர்களின் உருவப்படங்களைப் பார்க்கலாம். இங்கிருந்து இளைப்பாறலாம்.

தாய்:- நீ சொல்வது சரி. இன்னுமோர் நாளில் நான் என் பிள்ளைகளைத் திரும்பவும் கொண்டுவர வேண்டும்.

# ஒற்றுமையே பலம்

1) ஒரு நாள் உடலில் உள்ள உறுப்புக்கள் ஒன்று கூடி தமக்குள் பேசின.



2) நாம் எத்தனையோ வேலைகளைச் செய்கிறோம் இந்த வயிறு என்ன செய்கிறது ..."

3) கண் சிமிட்டியவாறு கூறியது. நான் பார்க்கிறேன்.



4) காது அசைந்தபடி கிளர்ந்தது "நான் கேட்கிறேன்.



5) மூக்கு மூச்சுவிட்டபடி கூறியது "நான் நுகர்கிறேன்"



6) நரம்பில்லா நாக்கு எக்காளமிட்டது. "நான் சுவைக்கிறேன்.



7) நாம் எத்தனை பணிகளைச் செய் கிறோம் இந்த வயிறு எமது உழைப் பில் சுகமாக வாழ்கிறது" ஆத் திரப்பட்டன உறுப்புகள்.

8) அமைதியாக இருந்த வயிறு தனக்குள் சிரித்தவாறு கூறியது... "உங்களை வாழ வைக்கவே நான் அமைதியாக செயல்படுகிறேன்."



9) ஒருநாள் உறுப்புக்கள் ஒன்று கூடின. "இனிமேல் நாம் எந்த வேலையும் செய்யக் கூடாது" என்று முடிவெடுத்தன



10) சற்று நேரத்தில் -- அனைத்தும் சோர்ந்தன "ஐயோ" எம்மால் அசைய முடியவில்லையே --- சோர்வாக இருக்கிறது --- ஒரே குரலில் துவண்டு சரிந்தன.



11) உண்மையை அறிந்த உறுப்புக் கள் வயிற்றிடம் மன்னிப்புக் கேட் டன. "வயிறே நீ உண்பதால் தான் எமக்குச் சக்தி கிடைக்கின்றது -- இனி ஒற்றுமையே பலம் என்று உணர்ந்து வாழ்வோம் -- என்றவாறு நட்பு கூட்டமையில் ஏற்பட்டன.

12) "ஒற்றுமையே பலம்" என்று பட்டால் உணர்வார் இதனை அனைவரும் உணர வேண்டும்.



— x —

# அனைத்துலகத் தமிழர் அன்னை! அமரர் பூபதி

தமிழீழ மக்கள் விடுதலை பெற ஆயுதப் போராட்டத்துடன் சாத்வீகப் போராட்டங்களும் அவ்வப்போது இடம்பெற்றுள்ளன. தன்னை வருத்தி, தன் இனத்தை வருத்துபவன் உள்ளத்தை உணர்த்தும் நோக்குடன் அன்னை பூபதி அமரத்துவம் பெறும்வரை உணவு உட்கொள்ளாமல் உயிர் துறந்தார்.

அன்னையெனப்படுபவள் தன் பிள்ளைகளின் இன்ப துன்பங்களில் முற்றும் முழுதாகப் பங்கு கொள்பவள். தன் பிள்ளைக்கு கெடுதல் வந்து விட்டால் துடியாகத் துடிப்பவள். வறுமை வரும் போது தான் பசியிருந்து பிள்ளைகளுக்கு உணவு வழங்குபவள். சிறார்கள் "அம்மா" என்று அழைக்கும் போது தாயின் உள்ளத்தில் பால் வார்த்தது போன்று மகிழ்ச்சியடைகிறாள்.

ஆனால் தமிழ் மக்கள் அனைவரையும் தன் பிள்ளைகளெனக் கருதி வாழ்ந்த பெருமைக்குரிய அன்னை பூபதி சற்று வித்தியாசமானவர். அவருக்கு தன் பிள்ளைகள் வேறு, அயலூர் பிள்ளைகள் வேறு எனத் தோன்றவில்லை. தமிழீழ மக்கள் அனைவரையும் தன் பிள்ளைகள் போல நேசித்தார். அவர்கள் படும் கஷ்டங்களை, துன்பத்தை பொறுக்க முடியாமல் பலமுறை மனமுடைந்து இருந்தார்.

சிறீலங்கா அரசு முரட்டுத்தனமாக நம்மவர்களைத் தாக்கி அழிக்கும் போதெல்லாம் அன்னை பூபதி தன்னை சித்திரவதை செய்வது போல துடியாகத் துடித்தார். அவரது மொழிப்பற்று, இனப்பற்று தமிழீழ மண் மேல் கொண்ட நாட்டுப் பற்று அத்தனையும் ஒருங்கிணைந்து அவரது சிந்தனை, செயல் என்பவற்றில் பரந்த புனிதமான பொதுநல முத்திரையை குத்தியது.

அன்னையருக்கு அன்னையாய், தமிழ் பேசும் மக்களின் அன்னையாய் வாழ்ந்த அன்னை பூபதி மட்டக்களப்பு மாநிலத்தின் கிராமத்துப் பெண். அங்கு கிரான் எனும் கிராமத்தில் அவதரித்தார். கிரான் வேளாண்மையில், கால் நடைகளில் வளர்ச்சி பெற்று பொருள் வளம் மிக்க கிராமம்.

அவர் 3 -11-1932ல் அவதரித்தார். உலகிற்கு உதயசூரியன் போல் அக் குடும்பத்திற்கு சூரியனாய் விளங்கிய சூரியன் கண்ணமுத்துவிற்கும் பெரிய பிள்ளை என்பவருக்கும் அன்புப் புதல்வியாக அவதரித்தார். இரு சகோதரிகள், இரு சகோதரர்களுடன் பிறந்த அன்னை பூபதி வறிய குடும்பத்தில் நல்லொழுக்கத்துடன் வளர்ந்து வந்தார்.

அக் கால கிராமிய வழக்கப்படி சித்திரைப் பௌர்ணமியில் வரும் சித்திரைக் கதை நன்நாளன்று ஏடு தொடக்கப் பெற்றார். எண்ணும் எழுத்தும் கற்றார். ஆரம்பப்பாடசாலையுடன், பாடசாலைக் கல்வியை நிறுத்தினார். அவர் நல்லதொரு குடும்பப் பெண்ணாக வீட்டு வேலைகளைக் கவனித்து வந்தார்.

அவருக்கும் இளவயதில் முத்துலிங்கம் எனும் விவசாயிக்கும் திருமணம் நடந்தது. அவர் இல்லறத்தை நல்லறமாகக் கொண்டு வாழ்ந்தார். அவர்களுக்கு இரு பிள்ளைகள் பிறந்தனர்.

காலன் தனது பாசக்கயிற்றை வீசினான். அது முத்துலிங்கத்தின் மேல் விழுந்தது.. இளவயதில் இல் வாழ்க்கையில் அன்னை பூபதி விதவையானார். அன்னைக்கு இரு பிள்ளைகளுமே எல்லாமாக இருந்தது..

1962ம் ஆண்டில் அன்னை பூபதியின் சிரமமான நிலையைப் பார்த்த உறவினர்கள் கவலைப்பட்டனர். அவ்வேளை, நான்கு பிள்ளைகளுக்கு தந்தையான கணபதிப்பிள்ளை தன் மனைவியை இழந்த நிலையில் இருந்தார். அவர் புகையிரதப் பகுதியில் பல வருடம் கங்காணியாக பணி புரிந்து வந்தார். அவர் அடிக்கடி பல இடங்களுக்கு செல்வதால் தன் பிள்ளைகளைப் பராமரிக்க முடியாது தவித்தார். உற்றார் அவரை அன்னை பூபதிக்கு மறு திருமணம் செய்து வைத்தனர்.

இவர்கள் இருவருக்கும் இரு ஆண்களும், இரு பெண்களும் பிறந்தனர். அவருக்கு பத்துப் பிள்ளைகள் அருகே நின்று "அம்மா", "அம்மா" என்று அழைக்கும் போது மட்டற்ற மகிழ்ச்சியாக இருந்தது.

அன்னை பூபதிக்கு முதல் தாரத்தில் பிறந்த இரண்டாவது மகன் திருமணமாகி ஒரு பிள்ளைக்கு தந்தை ஆகியிருந்தார். 28 வயதான அவர் சிறீலங்கா இராணுவத்தால் துடிக்க, துடிக்க சுட்டுக் கொல்லப்பட்டார். அவரது மூத்த மகன் திருமணமாகி நான்கு பிள்ளைகளுக்கு தந்தையானபோது சிறீலங்கா

இராணுவத்தால் பூஸா முகாமில் சித்திரவதை செய்யப்பட்டார். அன்னை பூபதியின் இரண்டாம் திருமணத்தில் பிறந்த 23 வயதான மகனையும் இராணுவம் சுட்டுக் கொன்றது.

அவர் இத்தனை இன்னல்களுக்கு மத்தியிலும் சமூகப்பணிகளில் சளையாது முன்னின்று உழைத்தார். அவர் உழைப்பின் பெரும்பகுதியையும் பொது சேவைக்கு செலவிட்டார்.

தமிழர் படும் இன்னல்களை பொறுக்க முடியாமல் "நான் தமிழருக்காகச் சாகும்வரை உண்ணாவிரதம் இருக்கப் போகிறேன்" எனக் கணவரிடம் கூற அவர் கணவர், நீ உன் விருப்பப்படியே செய் என்றார்.

தியாகத் தீயில் குதித்தார். இரு கோரிக்கைகளை முன் வைத்தார்.

அமைதி காக்க வந்த இந்தியப்படை அதற்கு மாறாக தமிழீழத்தில் செய்து வரும் மனித வேட்டைகளை நிறுத்த வேண்டும்.

நாட்டில் சாந்தி, சமாதானம் ஏற்பட்டு சுமூக நிலை தோன்றத் தமிழீழ விடுதலைப் புலிகளைப் பேச்சுவார்த்தைக்கு அழைத்து தீர்வு காண வேண்டும்.

19-03-1988 சனிக்கிழமை சாகும்வரை உண்ணாவிரதத்தை ஆரம்பித்தார். அவர் மாமாங்கேஸ்வரர் ஆலயத்தில் புனித கைங்கரியத்தை மேற்கொண்டார். நாட்கள் நகர்ந்தன. நாடித்துடிப்புக்கள் அச்சத்தைத் தந்தன. எந்த மருந்தும் எடுக்க அவர் மறுத்ததால் முப்பத்து இரு நாட்கள் நடத்திய சத்தியப் போராட்டம் அவரை 19/04/1988 அன்று எம்மிடமிருந்து பிரித்து விட்டது.

அவர் விட்ட பாதையை தொடர்வோம். அவர் கனவை நனவாக்குவோம்.

# MADAM PUPATHY, OUR BELOVED MOTHER

There are many ways in fighting for liberation. Our liberation struggle has been growing stronger and stronger, day by day. At times our beloved heroes felt that fasting till the death is one of the ways in fighting for liberation. It promotes truth of the struggle and gives and opportunity for the enemy to change his attitudes.

Late Annai Pupathy determined to fast till death and she did it. It is a landmark in our liberation struggle.

Usually mothers love their beloved kids. If there is not enough food for everybody, the mother forgoes her meals for the sake of her kids. But Annai Pupathy had gone millions step ahead of other mothers. She considered all persons of Tamil Eelam origin were her sons and daughters. She never discriminated any Tamil. She considered all of us were the members of her family.

She was a woman of actions but not a person of words. She always worked hard in giving her support for the liberation movement. Wherever she learnt about Sri-Lankan or Indian army attack, she got boiled and emotionally disturbed.

Such a unique mother was born on 03/11/1932 in the Batticalloa district in a village called Kiran. Kiran is a village famous for agriculture, Farming and cattle rearing are the main source of income for the people of Kiran.

Her father was a poor farmer. Her father's name was Surian Kannamuththu and mother was called Periapillai. She had two sisters and two brothers. They all were moral giants.

She began her formal Primary Education on a full moon day in the month called Sithirai (April). It was an auspious day for kids to begin their formal Primary Education. She completed her basic Education and helped her parents at home. She was given basic family training at home by her mother. She made her as a unique daughter.

At that time early marriage was in practice in her village. Her parents and prominent people in the village arranged her marriage. She got married to Muthulingam a rural farmer, They had two children. Unfortunately her husband died at his early age. It was a natural but untimely death.

Annai Pupathy devoted her time in bringing up her kids and helping all needy ones around her home. Though she was a single parent, she did not fail to satisfy all needs of her kids.

There was one railway worker Kanapathypillai who had four kids. He lost his wife too. By nature of his job, he was always on the move. He was in need of a person who could share the family responsibilities. The villagers requested Annai Pupathy to get married to him. She never refused a reasonable request made by the villagers.
In 1962 she got married to Kanapathypillai. She was blessed with two sons and two daughters. She had to look after altogether ten children. They all grew and led their family life very successfully.

Her second son was tortured and killed at the age of 28 by the Sir Lankan army. He was father of a kid. Her older son was taken to Boosa camp and tortured very badly. He was a father of four kids. She was very unhappy about it. She was totally against the activities of the army. She received another blow. Another son was killed by the army.

She buried all of her family problems in her mind and spent her time in doing social services. She felt that the time has come for her to expose her feeling and concerns about Tamil Liberation struggle.

One day, she went and told her husband that she was going to fast until her death, if her demands were not met. She forwarded two demands. They were as follows.

- The So-called Indian peace keeping force should stop all forms of killing innocent Tamil people.

- The Sri Lankan government should negotiate with the Liberation Tigers for a peaceful settlement.

She began her fasting on 19.03.1988 in a Hindu Temple Popularly known as Mamanka pillaiar Kovil. Her fasting continued for 32 days.
She became weak. She was requested to take at least some medicine. She refused and finally left all of us on 19.04.1988 in tears.

Let's all remember her historical sacrifices and follow her path. Let's all translate her dream into reality. That will serve well for the Liberation for Tamil Eelam Tamils.

# இரு சகோதரர்கள்

கதைச் சுருக்கம்:

வேலாயுதம் ஒரு உழைப்பாளி. அவருக்கு இரு பிள்ளைகள். மூத்தவன் செல்வன், நற்குணங்கள் உடையவன். இளையவன் குமார், தீய குணங்களைக் கொண்டவன், இருவரும் ஒரே வகுப்பில் படித்து வருகின்றனர்.










கோபமுடன் வெளியேறினான்










தன்நிலை உணர்ந்து திருந்திய குமார்









8) அண்ணாவின் அறிவையும் தம்பியின் ஆலோசனையையும் அனைவரும் போற்றினர்.

# குடியானவனும் தங்க வாத்தும்

ஒரு குடியானவன் வீட்டில் பல வாத்துக்கள் இருந்தன. அந்த வாத்துகளில் ஒன்று மட்டுமே ஒவ்வொரு நாளும் தங்க முட்டை இடும். அவன் அந்த தங்க வாத்தின் வயிற்றில் ஏராளமான தங்க முட்டைகள் இருக்கும் என்று ஒரு நாள் அவன் நினைத்தான். அந்த வயிற்றை அறுத்து எல்லா தங்க முட்டைகளையும் எடுத்து விற்று மிகப்பெரிய பணக்காரன் ஆகலாம் என்று நினைத்தான். ஆகையால் ஒரு கத்தியை எடுத்து அதன் வயிற்றை அறுத்தான். ஆனால் அதன் வயிற்றில் ஒரு தங்க முட்டை தான் இறந்தது அதைக் கண்டு மிக துக்கப்பட்டான்.

**"பேராசை பெரிய நஷ்டத்தைத் தரும்"**

# சிறுவர்களுக்கான பயனுள்ள தகவல்கள்

- உலகின் ஆழமான ஏரி எது தெரியுமா? ரஷ்யாவில் உள்ள 6365 அடி ஆழம் கொண்ட ஒஸிரோ ஏரியாகும்.
- உலகின் மிகப்பெரிய வைரச்சுரங்கம் தென்னாபிரிக்காவிலுள்ள சிம்பர்லி என்னுமிடத்திலுள்ளது.
- உலகிலேயே மிகப்பெரிய மணி கிரெம்ளினில் உள்ளது. இதன் எடை 193டன் ஆகும்.
- நமது உடலில் இரத்த ஓட்டமே இல்லாத பகுதி எது தெரியுமா? விழிவெண்படலம்.
- மகாகவி பாரதியார் குழந்தைகள் அறிவு வளர்ச்சியில் மிக அக்கறை கொண்டு 1918 ஆம் ஆண்டு பாலவினோதினி என்ற குழந்தைப்பத்திரிகையை நடத்தினார்.
- உலகிலேயே இங்கிலாந்தில் தான் முதல் தண்டவாளம் போடப்பட்டது.
- உலகிலேயே மிகப்பெரிய சிகரம் எது தெரியுமா? நேபாளத்தில் உள்ள எவரெஸ்ட் சிகரம் தான். உயரம் 29,040 அடி.
- தமிழில் ஏறத்தாழ பன்னிரண்டாயிரம் பழமொழிகள் உள்ளன. அவற்றில் நாலாயிரத்துக்கும் மேற்பட்டவை வேளாண் தொழிலைப்பற்றியதாகும்.
- பூச்சிகளிலேயே தூரப்பார்வை உடைய சிறப்பான பூச்சி வண்ணத்துப்பூச்சி.
- உதைப்பந்தாட்டப் போட்டியில் உலகக்கோப்பையை முதன் முதலாக வென்ற நாடு உருகுவே.
- ஜாம்போ ஜெட் விமானத்தில் மிகப்பெரிய டாங்கியில் நிரப்பப்படும் எரிபொருளைக் கொண்டு சாதாரணக்காரில் நான்கு முறை உலகைச் சுற்றிவர முடியும். அவ்வளவு எரிபொருளை ஒரே சமயத்தில் ஜாம்போ ஜெட் விமானம் சுமந்தபடி பறக்கிறது.
- உயிரினங்களிலேயே கொசு ஒன்றினால் மட்டுந்தான் எந்த சூழ்நிலையிலும் உயிர் வாழ முடியும். வடதுருவத்திலும், அதே சமயத்தில் பூமத்திய ரேகைப் பகுதிகளிலும் காணப்படும் ஒரே உயிரினம் கொசுதான்.
- அமெரிக்காவில் பிரசித்தி பெற்ற முதல் குழந்தைப் பத்திரிகை செயின்ட் நிக்கலஸ்.
- கங்காரு அதிகபட்சம் மணிக்கு 42கி.மீ வேகத்தில் ஓடக்கூடியது.
- மனிதன் ஒரு நிமிடத்திற்கு சராசரியாக 15 தடவைகள் கண் சிமிட்டுகிறான்.
- குடிதண்ணீரின்றி ஒட்டகத்தைவிட அதிக நாட்கள் வாழும் பிராணி எலியாகும்.
- 1-6-1991 முதல் சீனாவில் குழந்தைகளிடம் வேலை வாங்குவதை முழுவதுமாக சட்டபூர்வமாகத் தடைசெய்யப் பட்டுள்ளது.
- ஹம்மிங்போர்ட் என்னும் பறவைக்கு பின்னால் பறக்கக்கூடிய சக்தி உள்ளது.
- ஒரே போட்டியில் நான்குவிதமான நீச்சல் முறைகளும் கையாளப்படுவதே 'மெட்லி ரேஸ்' எனப்படுகிறது.
- பாட்மின்டன் விளையாட்டு இந்தியாவில் 1893 ஆம் வருடம் தொடங்கப்பட்டது.

பல்துலக்கு

முகம் கழுவு

நீராடு

இறைவனை வணங்கு

சுத்தமான ஆடையணி

தலைசீவு

உணவு உண்

பாடசாலைக்கு செல் என்பதாகும்.

எனவே பிள்ளைகளின் பழக்கவழக்கங்களுக்கு பெற்றோரே பொறுப்பு. நாம் இப்போ கனடாவில் தானே உள்ளோம். இவை தேவையில்லை என விட்டு விடாமல் இவைகளை எம் பிள்ளைகள் முறையாக கடைப்பிடித்து வர பெற்றோராகிய நாம் எம்மால் கைப்பற்றக் கூடியவைகளை கைப்பற்றி பிள்ளைகளின் எதிர் காலம் சிறக்க வழிசெய்வோமாக.



# தமிழ் புலவர்களும் அவர்கள் இயற்றிய நூல்களும்

| புலவர் பெயர் | இயற்றிய நூல் |
|---|---|
| 1.அகத்தியர் | அகத்தியம் |
| 2.அதி வீரராம பாண்டியர் | நைடதம் |
| 3.அபிராமிப்பட்டர் | அபிராமி அந்தாதி |
| 4.அப்பர் | 4-6 திருமுறைகள் |
| 5.அருணகிரி நாதர் | திருப்புகழ் |
| 6.இறையனார் | இறையனார் களவியல் |
| 7.கொங்கு வேர் | பெருங்கதை |
| 8.சம்பந்தர் | முதல் மூன்று திருமுறைகள் |
| 9.சுந்தரர் | ஏழாம் திருமுறை |
| 10.சேக்கிழார் | பெரிய புராணம் |
| 11.திருமூலர் | திருமந்திரம் |
| 12. திருவள்ளுவர் | திருக்குறள் |
| 13.தொல்காப்பியர் | தொல்காப்பியம் |
| 14.பவனந்தி முனிவர் | நன்னூல் |
| 15.புகழேந்திப் புலவர் | நளவெண்பா |
| 16.மாணிக்கவாசகர் | திருவாசகம் |
| 17.வில்லிப்புத்துரார் | வில்லி பாரதம் |
| 18.வீரமா முனிவர் | தேம்பாவணி |
| 19.ஒட்டக்கூத்தர் | தக்கயாகப் பரணி |
| 20.ஔவையார் | நல்வழி, நீதிநூல்கள் |
| 21.கச்சியப்ப சிவாச்சாரியார் | கந்தபுராணம் |
| 22 உமறுப்புலவர் | சீறாப் புராணம் |

## இவ் வருடம் ஜனவரி முதல் ஏப்பிரல் வரை பிறந்த நாளை கொண்டாடிய

# செஞ்சோலை சிறார்கள்



பெயர் : நிரோசன் மனோகரன்
பிறந்த நாள் : 28 - 01 - 1987



பெயர் : யசீலா மார்க்கண்டு
பிறந்த நாள் : 19 - 01 - 1985



பெயர் : துவாரகா முனீஸ்வரராஜா
பிறந்த நாள் : 20 - 01 - 1988



பெயர் : நிரூபன் நித்தியானந்தன்
பிறந்த நாள் : 18 - 03 - 1986



பெயர் : சாதனன் விஜயகுமார்
பிறந்த நாள் : 28 - 02 - 1989



பெயர் : நிதர்சனா நித்தியானந்தன்
பிறந்த நாள் : 23 - 04 - 1988



பெயர் : நிஷா விஸ்வநாதன்
பிறந்த நாள் : 28 - 03 - 1990



பெயர் : மிரோஷன் நித்தியானந்தன்
பிறந்த நாள் : 20 - 03 - 1989



பெயர் : கௌசிகா திருநாவுக்கரசு
பிறந்த நாள் : 19 - 02 - 1989





பெயர் : K. கன்னிகா
பிறந்த நாள் : 27 - 03 - 1991





பெயர் : நிலானி நகுலன்
பிறந்த நாள் : 11 - 04 - 1982




தமிழீழ மண்ணுக்காகவும், மக்களுக்காகவும் சாகும்வரை உண்ணாவிரதம் இருந்து தன் உயிரை அர்ப்பணித்துக் கொண்ட **அன்னை பூபதி.**

**ANNAI POOPATHY** WHO ATTAINED MARTYRDOM AFTER GOING ON A FAST UN TO DEATH FOR THE LIBERATION OF TAMIL EELAM AND ITS PEOPLE.